# சைவசமயவுண்மை

சைவசமயத்திற்குறிய சாஸ்திர வாராய்ச்சி சிறிது மில்லாத சைவர்கள் சிலரும், புறச்சமயர்கள் பலரும் சைவர்கள் பலதெய்வ வழிபாடு செய்யும் அனேகம்வரவாதிகள் போலுமென்பர். அந்தோ! இஃதறியாமையே, வேதாகாமேதிகாச புராணங்களிற் கொண்டா டப்படும் தெய்வமொன்றே. அதுவே சிவம், இச்சிவத்தினையே வழி படுபவர் சைவர், "ஏக ஏவருத்ரோ நத்விதீய யதஸ்தே" என்கிற சாபால சுருதியால், உருத்திரமூர்த்தி யொருவர் தவிர இரண்டாவதியாருமில்லை யெனவும், 'யாதஸ் தமஸ்தம் நதிவாக ராதார்நஸ ந்த சாஸச்சிவ ஏவகேவல" என்ற சுவேதா சுவதர சுருதியால் தமோமாத்ராவசேதனமாகிய சிருஷ்டிக்குப் பூர்வகாலத்தில் சர்வகாரணராகிய சிவபெருமானொருவரேயிருந்தாரென்றும் கூறுமாற்றாலறிக. மும்மூர்த்திகளில் ஒருவரைத் தெய்வமாகக் கொள்ளாது மூவரையுங் கடந்த நான்கவதாயுள்ள சிவத்தையே தெய்வமாகக் கொள்வர் சைவர், " ப்ரபஞ்சோப சமம் சாந்தம் சிவமத்வைதம் சதுர்த்தம்" என்ற மாண்டூக்யோப சுருதியே யிதற்குச் சான்றாம். சிவபெருமானே சகலருக்குத் தலைவரெனக்கொள்வர் சைவர், "தமீச்வராணாம் பரமம்மஹேச்வரப்தம் தேவதரநாம் பரமஞ்சதை வதம் பதிம்பதீநாம் பரமம்பரஸ்தாத்விதாமதேவம்புவநேசமீட்யம்" என்ற சுவேதாசுவதர சுருதியால் ஈசுவார்களுக்கெல்லாம் தலைவராகிய மஹேசுவரரும், தேவர்களுக்கெல்லாந் தலைவராகிய மகா தேவரும், பதிகளுக்கெல்லாந் தலைவராகிய பசுபதியும், பரமாயுள் வவர்க்கெல்லாம் தலைவாராகிய பராத்பாரும், சர்வஜகத்காரணரும் தியானமார்க்கத்தாலுபாசிக்கப்படு மவருமாசச் சிவபெருமானை நாங்கள் அறிகின்றோம் என்றதனாலறிக. பிரமமுதல் பீபிலிகை பரியந்தமுள்ள யாவரும் பசுக்களெனவும் இப்பசுக்களனைவருக்குஞ் சிவ பெருமானே பதியெனவுங் கொள்வர் சைவர். "ஸர்வேதேவா: பசுதாமவாபு: ஸ்வயம் தஸ்மாத்மாக்பசுபதிள் ஸம்பபூவ" எனவும், “ஸ்வதச்சிவ பசுபதிஸ்ஸாக்ஷி ஸர்வஸ்ய ஸர்வதா ஸர்வேஷாம்துமாஸ்தேநப்ரேரிதம் நியமேந்து" எனவும் போந்தவசனங்களால், சமஸ்தமான தேவர்களும் பசுக்களாவாரெனவும், அப்பசுக்களுக் குப்பதியும், ஸர்வத்துக்கும் ஸாட்சியும், ஸகல மனசுகளையும் நியமமாக வெங்கு மேவச்செய்கின்ற வரும் சிவபெருமானே யாவாரெனவெளிப்பட்டமையறிக. சிவபெருமானுக்குச் சபத்துவமாகவே றொரு தேவரை வணங்கார் சைவர், "யோமகாதேவமந்யேநஹீதனாத வேந்துர்மதி : ஸக்ருத்ஸாதாரணம்ப்ரூயாத் ஸோந்த்ய ஜோரா ந்த்யஜோந்த்யஜு" என்கிற புராணவசனத்தால் எவன் அன்னிய மானஹீன தெய்வங்களோடு சமானமாக ஒருவார்த்தையாவது மகா தேவரைப் பேசுவானோ அந்தத்துர்மதியே சண்டாளனாவனன்றி லோகப்பிரதீதியால் சண்டாளனென்றழைக்கப்படும் அவன் சண்டாளனாகான் என்பதே ஸ்பஷ்டம். இதற்கிணங்கவே நமது மணி வாசகர் "புற்றில் வாளரவு மஞ்சேன் பொய்யர்தம் மெய்யு மஞ்சேன், கற்றைவார் சடையெம்மண்ணல் கண்ணுதல் பாதநண்ணி மற்றுமோர் தெய்வந்தன்னை யுண்டென நினைந்தெம்பெம்மாற், கற்றிலா தவரைக்

கண்டாலம்ம நாமஞ்சுமாறே," எனத் திருவாய் மலர்ந்தருளினர். இதுகாறுங் கூறியவாற்றால் சைவர்கள் வணங்குந்தெய்வ மொன்றே அதுவே சிவம்.

இங்ஙனமாயின், சைவருட் சிலர் விஷ்ணு மூர்த்தியை வணங்குவதென்னை யெனின்? கூறுதும் ."பாணத்வம் வ்ருஷபத்வமர்ச் சகவபுர்பார்யாத்வமார்யாபதே கோணித்வம் சகிதாம் ருதங்கவஹ தாசேத்யாதி ரூபம்ததௌத்வத்பாதே நயனார்ப்பணஞ்சக்ருதவாந்த் வத்தேஹபாகோஹரிபூஜ்யாத் பூஜ்யதரஸ்ஸ ஏவநஹிசேத்கோவாத தந்யோதிகம்" என்னும் சிவானந்தலஹரி வசனத்தால் விஷ்ணு மூர்த்தி சிவபெருமானுக்குப் பாணமாகவும், அவர் ஏறும் எருதாகவும் அவரைப் பூசிக்கும் அர்ச்சகனாகவும், அவர்க்குப் பெண்டீராகவும், அவருடைய நிருத்தத்தில் மத்தளசேவை செய்வோனாகவும் அன் புபாராட்டி யுய்ந்த சிவனடியாரிற் சிறந்தவனாகலின் அம்மூர்த்தி யைச் சிவனடியாராக மதித்து வணங்குவர் சைவர். இக்கருத்துப் பற்றியே, "திருமாலுக்கடிமை செய்" என்றனர் பூலோக சரஸ்வதியாகிய ஔவை பிராட்டியார்.

சைவருட்சிலர், உயிர்ப்பலியேற்கின்ற துட்ட தேவதைகளாயும் காடன், மாடன், காட்டேறி! மதுரைவீரன், கொள்ளிவாய்ப்பேய் குறளைப்பேய், புறக்கடைமுனி, சடாமுனி முதலானவற்றை வணங்குவதும்; மகமதியர் பண்டிகையில் பாத்தியா செய்து நாடாபூணுவதும், மாதாகோவில்களில் காணிக்கை செலுத்துவது மென்னையோ வெனின், அந்தோ! அந்தோ! இத்தகையர் சைவர்கள் ஆகார் ! இவர்கள் வேடம் கூத்தாடி. வேடமேயாம். இவர்கள் சிவத்துரோகிகளாவர். இத்தகையினர்கட்கு வைதிகசைவர்கள் நற்புத்தி போதித்துச் சாத்திரவுணர்ச்சி செய்வித்து உண்மை தெரிவித்துத் திருப்பவேண்டியது இன்றியமையாத கடமையாம். "நலிதரு சிறிய தெய்வமென்றையோ நாட்டிலே பலர்பெயர் நாட்டிப், பவிதாவாடுபன்றிகுக்கிடங்கள் பலிக்கடா முதலியவுயிரைப் பொலிவுறக்கொண்டே போகவுங்கண்டே புந்தி நொந்துள நடுக்குற்றேன், கலியுறு சிறிய தெய்வவெங்கோயில் கண்டகாலத்தினும்பயந்தேன்" என்றனர் திருவருட்பிரகாசவள்ளலார். ஆகவே சுத்தாத்து விதசித்தாந்த வைதிக சைவராவார் வழிபடு தெய்வமொன்றேயாம் அதுவே சிவமாம்.

மணவழகு.

சித்தாந்தம் - 1914 ஞூ - ஏப்ரல் மீ